முதல் குற்றச்சாட்டு:காஸிம் நானூதவி அவர்கள், நபி ( ஸல் ) அவர்களை இறுதி நபி என்பதை மறுக்கிறார்கள் தக்க பதிலடி: இந்த குற்றச்சாட்டை ரிளாகான் பரலேவி, அன்னார் மீது சுமத்துகிறார்.இந்த குற்றச்சாட்டானது அபாண்டமானது.இது போன்ற பொய்களை சுமத்துவது காதியானிகளின் செயலாகும்.இந்த மோசமான கொள்கையை விட்டு மௌலானா நானூதவி அவர்கள் தூய்மையானவர்கள் இதற்கான பதிலை சுருக்கமாக பார்ப்போம்! முதல்விஷயம்:காஸிம் நானூதவி ரஹ் அவர்கள் “காதமுன் நபிய்யீன்” விஷயத்தில் அன்னாரின் கொள்கை நிலைப்பாட்டை தெளிவாக தெரிந்துகொண்டால் ரிளாகானின் பொய்யான வாதம் புஸ்வானமாகிவிடும். இதற்கான பதிலை காஸிம் நானூதவி அவர்களின் இரு நூல்களிலிருந்து பார்ப்போம்! خاتمیت زمانی اپنا دین و ایمان ہے ناحق کی تہمت کا البتہ کچھ علاج نہیں (مناظرہ عجیبہ) ( நபியவர்கள்) காலத்தில் இறுதியானவர்கள் என்பதுதான் நமது மார்க்கமும் ஈமானுமாகும்.நியாயமற்ற முறையில் இட்டுகட்டுவோருக்கு மருந்து ஏது?

அதே நூலின் 69 பக்கத்தில் خاتمیت زمانی اجماعی عقیدہ ہے நபி ஸல் அவர்கள் இறுதி நபி என்பது இஜ்மாவான கொள்கையாகும்.அதே நூலின் மற்றோர் இடத்தில் خاتمیت زمانی سے مجھ کو انکار نہیں நபியவர்கள் காலத்தால் இறுதியானவர் என்பதில் எனக்கு எந்த ஒரு மறுப்புமில்லை. بلکہ یوں کہیے کہ منکروں کے لئے گنجائش انکار نہ چھوڑی மாறாக மறுப்பவர்களுக்கும் நான் எவ்வித இடமும் விட்டுவைக்கவில்லை. மற்றோர் இடத்தில் கூறுகிறார் اپنا دین و ایمان ہے بعد رسول اللہ صلی اللہ کسی اور نبی ہونے کا احتمال نہیں جو اس میں تامل کرے اس کو کافر سمجھتا ہوں நபி ஸல் அவர்களுக்குப் பிறகு எவரும் நபியாக வருவதற்கு வாய்ப்பில்லை.எவராவது நபி (ஸல் ) அவர்களுக்கு பிறகு நபி வருவார் என சிந்தித்தாலே அவர் காபிர் என்பதாக நான் விளங்கியுள்ளேன். ரிளாகான் பரலேவி அன்னாரின் மீது எந்த நூலை முன்வைத்து குற்றம் சுமத்துகிறாரோ அதே நூலில் காஸிம் நானூதவி அவர்கள், நபி ( ஸல்) அவர்களை காதமுன் நபிய்யீன் என்பதை மறுப்பதானது இறைநிராகரிப்பு என்று தெளிவாக குறிப்பிட்டுள்ளார்கள். جیسا میں تعداد رکعات کا منکر کافر ہے ایساہی اس ختم نبوت زمانی کا منکر بھی کافر ہوگا (تحذیر الناس

தொழுகையின் ரக்அத்துகளின்

எண்ணிக்கையை மறுப்பது இறைநிராகரிப்போ அதைப் போல நபி ஸல் அவர்கள் இறுதி நபி என்பதை மறுப்பதும் இறைநிராகரிப்பாகும். எனவே காஸிம் நானூதவி ( ரஹ்)அவர்கள் காதமுன் நபிய்யீன் என்பதை மறுக்கவில்லை என தெளிவாக உணரமுடிகிறது.அன்னார் மறுப்பதாக ரிளாகான் பரலேவிதான் அபாண்டமாக பழிசுமத்தியுள்ளார் என்பதையும் விளங்கமுடிகிறது.ஆக இந்த குற்றச்சாட்டிற்கு இதுவே போதுமான பதிலாக இருந்தாலும் மேலதிகமான விளக்கத்தை பார்ப்போம்!

இரண்டாவதாக இது சம்பந்தமான விரிவான விளக்கத்தைப் பார்ப்போம்! இந்தியாவிலே சிலர் இப்னு அப்பாஸ் (ரளி) அவர்களின் அறிவிப்பை நிராகரித்தனர்.அந்த ஹதீஸின் கருத்து என்னவெனில் அல்லாஹ் ஏழு பூமிகளைப் படைத்துள்ளான்.ஒவ்வொரு பூமியிலும் ஒரு ஆதம் நபி இருக்கிறார்கள்.உங்கள் ஆதம் நபியைப் போல; ஒவ்வொன்றிலும் ஒரு நூஹ் நபி உங்களது நூஹ் நபியைப் போல; ஒவ்வொன்றிலும் ஒரு இப்ராஹிம் நபி உங்களது இப்ராஹிமை நபியை போல; இந்த அறிவிப்பை பல்வேறு உலமாக்கள் ஆதாரப்பூர்வமானது என

கூறியுள்ளனர்.இதனால் காஸிம் நானூதவி (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை மறுத்துவிடாமல் அழகான மாற்றும் விளக்கம் கொடுக்கிறார்கள்.அந்த ஹதீஸிற்கு பதிலளிப்பதற்கு ஒரு நூலை எழுதினார்கள் அதனின் பெயர் تحذیر الناس من انکر اثر ابن عباس இதில் அந்த ஹதீஸிற்கு அறிவிப்பூர்வமாகவும், ஆதாரப்பூர்வமாகவும் விளக்கம் கொடுத்துள்ளார்கள்.இந்தப் பதிலின் மூலம் "காதமுன் நபிய்யீனை" மறுப்பவர்களும் வாயடைத்துப்போயினர். ஆனால் மௌலானாவின் மீது காழ்ப்புணர்ச்சி கொண்டவர்கள் காதமுன் நபிய்யீனை மறுப்பதாக பழிசுமத்தினர்.எந்த குற்றச்சாட்டை நல்லடியாரின் மீது சுமத்துகிறார்களோ அதற்கு தக்க பதிலடி கொடுத்தவுடன் இவர்களின் உண்மை முகம் தோலுரிக்கப்படும். பரலேவிகளின் குஃப்ரு பத்வாவிலிருந்து நம் சமூகத்தில் உள்ள முன்சென்ற நல்லோர்களும் தப்பிக்கமுடியாது.

<u>இரண்டாவது குற்றச்சாட்டு</u>: سرِ تبسم بخاری கூறுகிறார்: இந்த இப்னு அப்பாஸ் ரளி அறிவிப்பை ஆதாரப்பூர்வமானது என வாதிட்டால் நபியைப் போன்று ஒரு நபி என ஒப்புமை ஏற்படும்.இதன்

மூலம் “கதமுன் நுபுவ்வதில்” பாதிப்பை ஏற்படும் .(ختم نبوت اور تحذیر الناس ) மௌலவி ஹஸன் அலி ரிளவி கூறுகிறார்: மௌலவி நகி அலி அவர்களின் கண்ணோட்டத்தில் இந்த இப்னு அப்பாஸ் ( ரளி) ஹதீஸை சரியென்று வாதிடுபவர் கதம் நுபுவ்வதை மறுப்பவரின் அணியில் நிற்பார்.(محاسبة دیوبندیت) மற்றொரு பரலேவி அறிஞர் கூறுகிறார்: இப்னு அப்பாஸ் (ரளி) ஹதீஸை ஆதாரம் எடுத்தால் மௌலானா நானூதவி கதம் நுபுவ்வதை மறுப்பாளர்களில் உள்ளடங்குவார்.( جسٹس محمد کرم شاہ کا تنقیدی جائزہ) மௌலானா غلام نصیر الدین سیالوی கூறுகிறார்: மௌலானா காஸிம் நானூதவி கதம் நுபுவ்வத்தை ஏற்பவராக இருந்தால் பிறகு ஏன் இப்னு அப்பாஸ் ரளி ஹதீஸை ஏற்கவேண்டும்? தக்க பதிலடி: இந்த குற்றச்சாட்டின் சாராம்சம் இப்னு அப்பாஸ் ரளி அவர்களின் ஹதீஸை சரியானது என்றால் அவர் கதம் நுபுவ்வத்தை மறுப்பவராகிவிடுவார். இப்பொழுது பரலேவியர்களின் கூற்றின்படி உம்மத்திலுள்ள பெரும் மார்க்க அறிஞர்களும் “கதம் நுபுவ்வத்தை” மறுப்பவர்களின் அணியில் வந்துவிடுவார்கள். அதனைப் பற்றிய விரிவான

ஆய்வை பார்ப்போம்! பரலேவி அறிஞர் குலாம் ஸயீதி கூறுகிறார்கள்: இப்னு அப்பாஸ் ( ரளி) அவர்களின் ஹதீஸை ஹாகிம் ( ரஹ்) அவர்கள் சரியான அறிவிப்பாளர் தொடரில் உள்ளதாகவும், இமாம் புகாரி,முஸ்லிம் இருவரின் நிபந்தனைக்கு உட்பட்டது என்பதாகவும் குறிப்பிட்டுள்ளார்கள். இதனை ஹாபிள் தஹபி அவர்களும் அங்கீகரிக்கிறார்கள்.இமாம் அபூபக்கர் அஹ்மது இப்னு ஹீஸைன் பைஹகி அவர்கள் இதனை இரு அறிவிப்பாளர்களின் தொடர் வழியாக அறிவித்துள்ளார்கள்.இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் தொடரானது ஆதாரப்பூர்வமானது என்றாலும் முர்ரா இருப்பதால் ஷாத்தாகும். ( அரிதானதாகும்) மற்றொரு அறிவிப்பாளர் தொடரில் உள்ள அறிவிப்பாளர் “அபுள்ளஹிக்கு” துணைச்சான்று உள்ளதாக நான் அறியவில்லை ( كتاب الاسماء و الصفات \ تبيان القرآن ) மேலும் ஸயீதி கூறுகிறார் حافظ عماد الدين بن عمر بن كثير شافعى அவர்கள்,அவரின் தப்ஸீரில் இப்னு அப்பாஸ் ( ரளி) அவர்களின் ஹதீஸை இமாம் பைஹகியின் நூலான كتاب الاسماء و الصفات லிருந்து எடுத்தெழுதி மேற்கோள்காட்டியுள்ளார். அதனின்

அறிவிப்பாளர் சம்பந்தமாக எந்த ஒரு விமர்சனமும் செய்யவில்லை.(القرآن تنطق) அல்லாமா அய்னி அவர்களும் இந்த அறிவிப்பு சம்பந்தமாக ஆய்வு செய்துள்ளார்.(القرآن تنطق) அல்லாமா ஆலுஸி அவர்கள் இந்த அறிவிப்பானது ஆதாரப்பூர்வமானது என்பதில் ஷரீஅத்து ரீதியாகவோ, அறிவுரீதியாகவோ எந்த தடையுமில்லை.(القرآن تنطق) அல்லாமா ஹாபிள் இப்னு ஹஜர் ரஹ் அவர்கள், 'இமாம் பைஹகி அவர்கள் இந்த ஹதீஸை முர்ராவுடன் ஷாத்தாக இருப்பதுடன் ஸஹீஹ் என்பதாக கூறியதை' மேற்கோள்காட்டியுள்ளார்.மௌலவி அப்துல்ஹை லக்னவி ( ரஹ்) அவர்கள் இந்த அறிவிப்பானது சரியானது.இதன் மீது விமர்சனம் இருந்தாலும் ஏற்றுக்கொள்ளத்தக்கது. அங்கீகரிக்கப்பட்டது என்பதாக குறிப்பிட்டுள்ளார்கள்.(زجر الناس) ஆக எந்த காரணத்தை முன்வைத்து மௌலானா காஸிம் நானூதவி அவர்களை "காபிர்" என்பதாக தீர்ப்பளித்தார்களோ அதே காரணம் பெரும் மார்க்க அறிஞர்களான பைஹகி,ஹாகிம்,தஹபி, அய்னி,ஆலூஸி அவர்களிடமும் பெறப்படுகிறது. பரலேவிகள்

மார்க்கத்தின் மீது பற்றுள்ளவர்களாக இருந்தால் இவர்கள் மீது காபிர் என தீர்ப்பளிக்க தயாரா? கியாமத் வரை அவகாசம் தருகிறோம்! (அல்லாஹ் பாதுகாப்பானாக!) இப்னு அப்பாஸ் (ரளி) அவர்களின் அறிவிப்பை ஏற்பதானது கதமுன் நுபுவ்வத்தை மறுப்பதாகும்.தக்க பதிலடி: மௌலானா غلام دستگیر قصوری கூறுகிறார்கள்: அந்த பூமிகளிலே எந்த நபி உள்ளாரோ அதை கவனித்து அந்த நபி இறுதியானவர்.நம் பூமியில் அனுப்பப்பட்ட நபிமார்களை கவனித்து நபி ஸல் அவர்கள் இறுதியானவர்கள் (تنبیہ القرآن) மௌலானா அப்துல்ஹை லக்னவி ( ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: ஒரு காதமுர் ரஸூல் நம் பூமியில் இருப்பதை போன்று ஒவ்வொரு பூமியிலும் ஒவ்வொரு காதமும் இருப்பார்கள்.(مجموعہ فتاوی) அல்லாமா அப்துல்ஹை லக்னவி மற்றும் மௌலானா قصوری இருவரும் பல பூமிகளிலே நபிமார்களை ஏற்றுக்கொண்டுள்ளார்கள்.எனவே இருவருக்கு எதிராகவும் பரலேவிகள் போர்க்கொடி தூக்க தயாரா?

## மூன்றாவது குற்றச்சாட்டு

காஸிம் நானூதவி ( ரஹ்) அவர்கள் تحذیر الناس ல் கூறியுள்ளார்கள் بلکہ اگر بالفرض بعد زمانہ نبوی بھی کوئی نبی

پیدا ہو تو بھی خاتمیت محمدی میں کچھ فرق نہ آئے گا நபிகள் நாயகம் ( ஸல்) அவர்களுக்குப்பின் வேறொரு நபி உண்டாவார்கள் என கற்பனையாக வைத்துக்கொண்டாலும் நாயகம் ( ஸல்) அவர்கள் “காதமுன் நபிய்யீன்” என்பதில் யாதொரு வித்தியாசமும் உண்டாகாது!”

பரலேவிகளின் குற்றச்சாட்டு: سید تبسم بخاری பரலேவி அறிஞர் கூறுகிறார்: நபி (ஸல்) அவர்களைப் போன்று நபி வருவதற்கு சாத்தியமுள்ளதாக கற்பனையாக கூறுவதும் கதம் நுபுவ்வதில் பாதிப்பை ஏற்படுத்தும்.( ختم نبوت اور تحذیر الناس) மற்றோர் அறிஞர் கூறுகிறார்:வேறு நபி வருவதற்கு சாத்தியமுள்ளதாக கற்பனையாக கூறுவதும் ‘கதம் நுபுவ்வதை’ மறுப்பதாக அமைகிறது.(دیوبندیوں سے لا جواب سوالات) நபி (ஸல்) அவர்கள் இறுதி நபி என்பதை ஏற்றுக்கொண்டு வேறு நபி வருவதாக கற்பனை செய்வதும் குஃப்ராகும் என பரலேவி மௌலவி உமர் குறிப்பிட்டுள்ளார். ( مقیاس حنفیت) எவரேனும் ஒருவர் நபிக்கு பிறகு நபி வருவார் என்று கற்பனையாக கூறினாலும் அவர் காஃபிராவார்.(علم القرآن) நபிக்கு பிறகு நபி வருவது சாத்தியமுள்ளது அல்லது ஆகுமானது என யாராவது கூறினால் அவர்

மதம்மாறியவராவார்.(شان حبیب الرحمان) தமிழகத்தில் உள்ள பரலேவிகள் கூட இதே வாதத்தை எழுப்புகிறார்கள் நபியவர்களுக்குப் பிறகு இனி ஒரு நபியில்லை என்று இறைவன் முடிவு செய்த விஷயத்தில் உங்களுக்கு கற்பனை எப்படி வந்தது?அப்படி ஒரு கற்பனை உதித்ததே ஈமானை பலவீனப்படுத்தியதாகாதா? (புதிய பயணம் செப் 2007) தக்க மறுப்பு:கற்பனை செய்வது கூடாது எனில் நபி ஸல் அவர்களின் பொன்மொழிக்கு என்ன பதில்? لو كان بعدي نبي لكان عمر எனக்கு பிறகு நபி வருவதாக இருந்தால் உமராக இருப்பார் என நபி ஸல் அவர்கள் நவின்றுள்ளார்கள். பரலேவிய அறிஞர் பீர் முஹர் அலி ஷாஹ் ஸாஹிப் கூறுகிறார்கள்: நபி (ஸல்)அவர்களுக்குப் பிறகு நபி வருவதற்கு சாத்தியமுள்ளது என்று சொல்பவர் கூலிகொடுக்கப்பட்டவராக, நன்மை அளிக்கப்பட்டவராக உள்ளார்.(فتاوى مہری) பரலேவி அறிஞரும் முஃப்தியுமான மௌலானா ஸத்ருத்தீன் அவர்களும் சாத்தியமுள்ளது என்பதை ஏற்கிறார்கள்.(خیر آبادی) பரலேவி பகீஹ் மில்லத் அவர்களின் பதவாவிலே குறிப்பிட்டுள்ளார்கள் சந்தேகமின்றி ஈருலக

தலைவர் நபி ஸல் அவர்களுக்குப் பிறகு நபி வருவதற்கு ஷரீஅத் ரீதியாக சாத்தியமும் அறிவுரீதியாக வாய்ப்புள்ளது.(فتاوى فيض الرسول ) பரலேவி அறிஞர் ஃபாளில் கூறுகிறார்: 'கதம் நுபுவ்வத்' இல்லாமல் இருந்திருந்தால் ஹள்ரத் غوث அவர்கள் நபியாக வரமுடியும்.(عرفان شريعت) முஃப்தியார் நயீமி கூறுகிறார்: காதியானி நபியாக இருந்திருந்தால் இன்றைய அறிவியல் உலகில் அவனிடத்திலிருந்து அனைத்து கண்டுபிடிப்புகளை விட புதிய கண்டுபிடிப்பானது வெளிப்பட்டிருக்கும்.( تفسير نور العرفان ) காதியானி நபியாக இருந்திருந்தால் இப்ராஹிம் (அலை) அவர்களின் சந்ததியிலிருந்து வந்திருக்க வேண்டும்.( نور العرفان) காதியானி நபியாக இருந்திருந்தால் எவரிடத்திலும் மாணவராக இருந்திருக்க கூடாது.(نور العرفان) ஆக கற்பனையாக கூட நபிக்கு பிறகு நபி வருவார் என கூறுவது குஃப்ர் என்றால் அத்துணை பரலேவி அறிஞர்களையும் காபிர்' என ஏன் தீர்ப்பளிக்கவில்லை? காஸிம் நானூதவி அவர்களை மட்டும் காபிர் என தீர்ப்பளித்தது காழ்ப்புணர்ச்சியே அன்றி வேறில்லை.தஹ்தீருன்னாஸில் இருப்பதன் விளக்கம்

மௌலானா அவர்கள் தஹ்றீருன்னாஸில் கதம் நுபுவ்வத்தைப் பற்றிய ஞானமும்,அறிவும் நிறைந்த ஆய்வு செய்துள்ளார்கள்.ஏறத்தாழ நாற்பது பக்கம் கொண்டது.குர்ஆனில் உள்ள காதமுன் நபிய்யீன் என்ற பதத்தை விவரித்துவாறு மூன்று வகையாக விளக்கியுள்ளார்கள்.அவை زمانی خاتم النبیین ( நபி ஸல் அவர்கள் காலத்தால் இறுதி நபியாவார்கள்) مکانی خاتم النبیین (நபி ஸல் அவர்கள் பூமியெனும் இடத்தால் இறுதியானவர்கள்) مرتبی خاتم النبیین (நபி ஸல் அவர்கள் அந்தஸ்திலும் இறுதியானவர்கள்) இதில் முதல் வகையை சாமானிய மக்களும் அறிந்துள்ளனர்.ஆக மௌலானா அவர்கள் இந்த மூன்றையும் முன்வைத்து நபி ஸல் அவர்கள் خاتم என்பதை நிரூபித்துள்ளார்கள். மேலும் நபி (ஸல்) அவர்களின் நுபுவ்வத்தானது அசலானது.மற்ற நபிமார்கள் நபி ஸல் அவர்களுக்கு பிரதிநிதிகளாக, பின்பற்றகூடியவர்களாக அமைந்துள்ளனர்.நபியின் நுபுவ்வத் நேரடியாக அல்லாஹ்விடமிருந்து கிடைத்தது.மற்ற நபிமார்களின் நுபுவத்தானது நபி ஸல் அவர்களின் பொருட்டால் கிடைத்தது. நபிக்கு

பிறகும் எந்த ஒரு நபியும் வரமுடியாது.இதற்கு அறிவு ரீதியாகவும்,மார்க்க ரீதியாகவும் ஆதாரங்களை கொடுத்து நிரூபித்துள்ளார்கள். எவராவது நபிக்குப் பிறகு நபி வருவார் என்று சொன்னால் அவர் உறுதியான சொல்லின்படி காபிராவார்.இஸ்லாமை விட்டு வெளியேறியவர்.குர்ஆனில் உள்ள காதமுன் நபிய்யீன் மற்றும் ஹதீஸில் لا نبي بعدي மற்றும் இஜ்மாவை முன்வைத்து நபி ஸல் அவர்கள் இறுதியானவர்கள் என்பதை நிலைநாட்டியுள்ளார்.இதில் கூறப்பட்டுள்ள வாசகங்களை திரித்தும்,புரட்டியும் காஸிம் நானூதவி அவர்களை விமர்சிக்கின்றனர். அவைகளைப் பற்றிய விளக்கங்களை இனி பார்ப்போம்! நான்காவது குற்றச்சாட்டு நபி (ஸல்) அவர்களின் தாத் தை நபியாக ஏற்று மற்ற நபிமார்களின் தாத்தை நபியின் நுபுவத்திற்கு பிரதிநிதியாக கருதுவது மற்ற நபிமார்களின் நுபுவ்வத்,ரிஸாலத்தை மறுப்பதாகும்.(عبارات اکابر کا تحقیقی و تنقیدی جائزہ) அல்லாமா அஹ்மது ஸயீத் காளிமி கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்களுக்கும் மற்ற நபிமார்களுக்கும் மத்தியில் அசல் என்றும்,கிளை என்றும் பிரிப்பது குர்ஆனின் பல

ஆயத்துகளுக்கு எதிரானது.(مقالات کاظمی) மௌலானா تبسم بخاری கூறுகிறார்கள் நபி ஸல் அவர்களின் நுபுவ்வத்தானது حقیقی (அந்தரங்கமானது) என்பதாகவும் மற்ற நபிமார்களின் நுபுவ்வத்தானது مجازی (வெளிப்படையானது) என்பதாக கூறுவதானது குர்ஆனின் வசனத்தில் கருத்துரீதியாக மாற்றம் ஏற்படும்.மேலும் இவ்வாறு சொல்வதானது மற்ற நபிமார்களின் நுபுவ்வத்தை அப்பட்டமாக மறுப்பதாகும்.(ختم نبوت اور تحذیر الناس) இதன் மூலம் அவர்கள் கூறுவது: காஸிம் நானூதவி அவர்கள் நபியின் நுபுவ்வத்தை அசல் என்றும் அதற்கு தாபிய்தான் மற்ற நபிமார்களின் நுபுவ்வத் என பிரித்ததால் மற்ற நபிமார்களின் நுபுவ்வத்தை மறுப்பவராகிவிடுகிறார். தக்க பதிலடி: பரலேவி அறிஞர் அல்லாமா அதா முஹம்மது நக்ஷபந்தி ஷைகுல் ஹதீஸ் கூறுகிறார்கள்: அல்லாமா சுலைமான் ஜமல் அவர்களின் கண்ணோட்டத்தின் படி நபி ( ஸல்) அவர்கள் அசலான நபியாக,ரஸூலாக அழைப்பாளராக இருக்கிறார்கள்.மற்ற நபிமார்கள் நபி ( ஸல்) அவர்களுக்கு பிரதிநிதியாக இருப்பதுடன் அழைப்பு கொடுக்கிறார்கள்.(خلاصة الكلام) மேலும் அதே

நூலில் கூறுகிறார்கள்: அறிஞர்கள் தெளிவுப்படுத்தியுள்ளனர். நபி ஸல் அவர்கள் مطلق(பொதுவாக) கவும்,حقيقي(அந்தரங்கமாக) கவும் நபியாக இருக்கிறார்கள்.முன்னால் சென்றுவிட்ட நபிமார்கள் தங்களின் காலத்திலேயே நபி ஸல் அவர்களுக்கு தாபியாகவும்,நபியின் நுபுவத்திலே பிரதிநிதியாக இருந்து கடமையாற்றினார்கள். மற்றோர் இடத்தில் அல்லாமா ஆலூஸி அவர்களின் கருத்தை மேற்கோள்காட்டுகிறார்கள்.ஞானவான்களின் கருத்துப்படி நபி ( ஸல்) அவர்கள் பொதுவாகவும், அந்தரங்கமாகவும் ஷரீஅத்தை கொண்டுவந்தவர்கள். மற்றவர்கள் நபி ஸல் அவர்களுக்கு தாபியாக உள்ளார்கள்.

குர்ஆனின் பின்வரும் வசனத்தின் மூலமும் நிரூபணமாகிறது. وإذ أخذ الله ميثاق النبيين لما آتيتكم من كتاب وحكمة

ثم جاءكم رسول مصدق لما معكم لتؤمنن به ولتنصرنه

قال أأقررتم وأخذتم على ذلكم إصري قالوا أقررنا قال

فاشهدوا وأنا معكم من الشاهدين கருத்தாவது: அல்லாஹ் நபிமார்களிடம் “திண்ணமாக, நான் உங்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் வழங்கியுள்ளேன்; இதன் பின்னர் உங்களுடன்

இருக்கின்ற (வேதத்)தை மெய்ப்படுத்தக் கூடிய தூதர் எவரேனும் உங்களிடம் வந்தால்,நிச்சயமாக அவரை நீங்கள் நம்பவேண்டும்; இன்னும் அவருக்கு உதவி புரியவேண்டும்" என்று உறுதிமொழி வாங்கின(ான் அப்) போது நீங்கள் இதன்படி என்னுடைய ஒப்பந்தத்தை ஏற்று உறுதிமொழி கூறுகிறீர்களா? என்று கேட்டான்.அதற்கு அவர்கள் உறுதிமொழி கூறுகிறோம்" என்றனர்.அப்போது "நீங்கள் சாட்சியாக இருங்கள்.நானும் உங்களுடன் சாட்சியாக இருக்கிறேன்" என்று கூறினான்.இந்த ஆயத்தின் العقين تجلى விரிவுரையில் ரிளாகான் குறிப்பிட்டுள்ளார்.அதனின் சுருக்கமாவாது அல்லாமா ஸுப்கி ரஹ் அவர்கள் இந்த ஆயத்திற்கு விரிவுரையாக தனி நூலை எழுதியுள்ளார்கள்.அதனின் பெயரானதுالتعظيم و المنة இந்த ஆயத்தின் மூலம் நிரூபணமாகியுள்ளது நம்முடைய நபி ஸல் அவர்கள் நபிமார்களுக்கு நபியாக இருக்கிறார்கள்.அனைத்து நபிமார்கள்,ரசூல்மார்கள் அவர்களின் சமுதாயத்தினர்கள் நபி ஸல் அவர்களின் உம்மத்தினராக இருக்கிறார்கள்.நபி ஸல்

அவர்களின் நுபுவ்வத்,மற்றும் ரிஸாலதானது ஆதம் அலை காலம் முதற்கொண்டு கியாமத் வரை படைப்புகளுக்கு பொதுவானது.இவ்வாறு கூறியவாறு இறுதியில் குறிப்பிட்டுள்ளார்கள். நோக்கமாக அசலாக இருப்பது நபி ஸல் அவர்கள்தான் மற்றுமுள்ள நபிமார்கள் அனைவரும் தாபியாக இருக்கிறார்கள்.

நபிமார்களின் நுபுவ்வத்தை مجازى( வெளிப்படையானது) என்று காஸிம் நானூதவி அவர்கள் கூறியதானது நுபுவ்வத்தை மறுப்பதாகும் என வாதிட்ட பரலேவி அறிஞர்கள் இதே கருத்தை கூறிய அல்லாமா அதா முஹம்மது மற்றும் அல்லாமா ஸூப்கி (ரஹ்) அவர்கள் மற்றும் ஆலூஸி மற்றும் ஞானவான்களையும் நுபுவ்வத்தை மறுத்தவர்களின் பட்டியலில் இணைக்கதயாரா? ஷைகுல் ஹதீஸ் அதா முஹம்மது அவர்கள் அல்லாமா ஆலூஸியின் மற்றொரு சொல்லையும் மேற்கோள்காட்டுகிறார். நபிமார்களில் சிலருக்கு நுபுவ்வத்தானது சிறுபிராயத்தில் வழங்கப்பட்டது.அதற்கான தகுதியும் அவர்களிடம் இருந்தது.அப்படியிருக்கும் போது நபி ஸல் அவர்களும் சிறுவயதிலேயே நுபுவத்திற்கு

பொருத்தமானவர்கள். ஏனெனில் நபி ஸல் அவர்கள் அசலானவர்கள்.கிளையை விட அசலிற்குதான் தகுதி மிகுதியாக அமைந்திருக்கும்.مطالع المسرات என்ற தலாயிலுல் கைராதின் விளக்கவுரையில் ஷைக் உஸ்மான் கூறுகிறார்கள் ஆரம்பம் முதற்கொண்டு இறுதிவரை அந்தரங்க நபி எவருமில்லை.நபி ஸல் அவர்களை தவிர. பரலேவிகளின் தலைவராகவும்,இமாமாக உள்ள மௌலவி நகி அலி கான் கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் நுபுவ்வதெனும் பதவியில் அசலாக இருக்கிறார்கள்.(الكلام الاوضح سرور القلوب) தாகிர் ஹீஸைன் ஷாஹ் ஸய்யாலவி கூறுகிறார்: நுபுவ்வத்தின் அசலானது நபி ( ஸல்) அவர்களின் பரிசுத்தமான தாத்தாகும்.( نبي الانبياء و المرسلين) மௌலவி அஷ்ரப் அலி ஸய்யாலவி கூறுகிறார்: நுபுவ்வத்தின் அடிப்படையும்,அசலும் நபி ( ஸல்) அவர்கள்தான் ( كوثر الخيرات) மௌலவி அப்துல் மஜீத்கான் ஸயீதி கூறுகிறார்கள்:நபி ( ஸல்) அவர்களின் நுபுவ்வத்தானது அசலாகவும் மற்ற நபிமார்களின் நுபுவ்வத்தானது இணைப்பாகவும் உள்ளது.(نبوت عند الشيخين) பரலேவி அல்லாமா காளிமி அவர்கள் கூறுகிறார்கள்: நபி

(ஸல்) அவர்கள்தான் முழு உலகம் உண்டாகுதலின் காரணியும் பரிபூரணத்தகுதியின் அசலும் அவர்கள்தான் (نبوت عند الشيخين) பரலேவிகளால் போற்றப்படும் அறிஞர் பீர் கரம் ஷாஹ் அவர்கள் மௌலவி காஸிம் நானூதவியின் கருத்தை எடுத்தெழுதிய பிறகு محشی அவர்களின் வாக்கியத்தையும் எடுத்தெழுதியவாறு இதுதான் உலமாயே அஹ்லே ஸீன்னத்தின் அகீதா என்று கூறியுள்ளார்.அந்த வாக்கியமானது இதுவாகும்.நபி ஸல் அவர்கள் நுபுவ்வத் தாத்தாகும்.மற்ற நபிமார்களின் நுபுவ்வத்தானது அதற்கு பிரதிநிதியாகும்.இதனை பீர்கரம் ஷாஹ் அஹ்லே சுன்னாவின் கொள்கை என நிலைநாட்டியுள்ளார்.(تحذیر الناس میری نظر میں) இதன் மூலம் மௌலானா காஸிம் நானூதவி அவர்கள்,நபிமார்களின் நுபுவ்வத்தை மறுப்பவராக சித்தரித்த பரலேவிகளின் நயவஞ்சகமும், கயமைத்தனமும் பகிரங்கமாக வெளிப்படுகிறது.

## ஐந்தாவது குற்றச்சாட்டு

கதம் நுபுவ்வத் தொடர்பில் அடுத்த குற்றச்சாட்டும் அதற்கான மறுப்பை எளிதாக

புரிந்து கொள்ள முதலில் காஸிம் நானூதவி (ரஹ்) அவர்களின் உர்து வாசகத்தின் மொழிபெயர்ப்பும், இரண்டாவதாக அதில் ரிளாகானின் திரிபுவாதம் மூன்றாவதாக அதற்கு தெளிவான மறுப்பு என வரிசையாக பார்ப்போம்!

காஸிம் மௌலானா நானூதவி ( ரஹ்) அவர்களின் تحذیر الناس ன் வாசகம் عوام کے خیال میں تو رسول اللہ صلی اللہ علیہ و سلم کا خاتم ہونا بایں معنی ہے کہ آپ کا زمانہ انبیاء سابق کے زمانہ کے بعد اور آپ سب میں آخر نبی ہیں சாமானிய ஜனங்களின் கருத்தின்படி நபி ஸல் அவர்கள் அனைத்து நபிக்கு பிறகு வந்த இறுதியான நபியாவார். அவருக்குப் பிறகு வேறு நபி இல்லை என்பதாகும்.ரிளாகானின் திரிபு: இதில் காஸிம் நானூதவி அவர்களிடத்தில் ‘காதமுன் நபிய்யீன்’ என்பதன் கருத்து நபி (ஸல்) அவர்கள் காலத்தால் இறுதியானவர்கள் என்பது சாமானிய ஜனங்களின் கருத்தாகும் என கூறுகிறார்கள்.ஆனால் இந்த கருத்தானது நபி ஸல் அவர்களிடமிருந்தும் ஸஹாபாக்களிடமிருந்தும் அறிவிக்கப்பட்டுள்ளது. காஸிம் நானூதவி அவர்கள், நபி ஸல் அவர்களையும், ஸஹாபாக்களையும் சாமானிய மக்களாக சித்தரிக்கிறார்.தக்க பதிலடி: ரிளாகான் பரலேவி இந்த இடத்தில் மிகப்பெரிய மோசடி

செய்துள்ளார்.ஏனெனில் மௌலானா காஸிம் ரஹ் அவர்கள்,சாமானிய ஜனங்கள் (عوام) எவர் என்பதை அவரே விளக்கிகூறியுள்ளார். باب تفسیر سوائے حضرت انبیاء کرام علیہم السلام کی علماء راسخین فی العلم کے سب ( عوام ہی ) قاسم العلوم نمبر اول مکتوب ஹள்ரத் காஸிம் நானூதவி (ரஹ்) அவர்கள், நபி (ஸல்) அவர்கள் மேலும் மார்க்க அறிவில் பாண்டித்துவம் பெற்று விளங்கும் அறிஞர்களை தவிர குர்ஆனின் விரிவுரை துறையில் மற்றவர்கள் அனைவரும் சாமானிய ஜனங்கள்தான்.(இதற்கு முதலில் தகுதியானவர்கள் மார்க்கத்தின் முன்னோடியான ஸஹாபாக்கள் தான்)

இவ்வளவு தெளிவாக கூறியிருக்கும் போது ரிளாகான் பரேலவி தவறான வாதத்தை வைப்பதானது மிகப்பெரிய மோசடியும், நேர்மையற்ற நடைமுறையுமாகும். ரிளாகான் பரலேவி அவரின் நூலான الدولة الملكية ல் அபுத்தர்தா ரளி அவர்கள் நபி ஸல் அவர்களிடமிருந்து அறிவிக்கும் ஹதீஸை கொண்டுவந்துள்ளார்.அந்த ஹதீஸின் விரிவுரையில் கூறுகிறார் குர்ஆனின் விரிவுரையில் பலதரப்பட்ட நுணுக்கங்களை கையாளும் ஆற்றல் பெறும் வரை பரிபூரணத்துவ மார்க்க விற்பன்னராக

முடியாது.ஆக காஸிம் நானூதவி (ரஹ்) அவர்கள் சாமானிய ஜனங்கள் என்று எவரைக் குறித்து கூறினாரோ,ரிளாகானின் கூற்றும் அதுதான். வினாவும் விளக்கமும்: சாமானிய ஜனங்களின் கருத்தின்படி நபி ( ஸல்) அவர்கள் 'காதமுன் நபிய்யீன்' என்பதற்குப் பொருள் அவர்கள் இறுதி நபியாகவும், அவர்களுக்குப் பிறகு வேறு நபி இல்லை என்பதாகும். இதுதான் காஸிம் நானூதவி ரஹ் அவர்கள் கூறியது இதில் நமக்கு கேள்வி எழலாம். இதுதான் நமது அஹ்லுஸ்ஸுன்னாவின் நிலைப்பாடும் பிறகு எப்படி இது சாமானிய ஜனங்களின் கருத்தாகும்? விளக்கம்: மௌலானா காஸிம் நானூதவி ரஹ் அவர்கள் காலத்தால் நபியவர்கள் இறுதியானவர்கள் அவர்களுக்குப் பின்பு வேறு நபி இல்லை என்பதை சாமானிய ஜனங்களின் சிந்தனை என்று சொல்லவில்லை.ஏனெனில் காஸிம் நானூதவி ரஹ் அவர்களின் கொள்கையும் அதுதான்.இதை நாம் மறுப்பின் ஆரம்பத்திலேயே கூறியுள்ளோம்.இங்கு மௌலானா கூறவருவாதானது காதமுன் நபிய்யீன் என்பதானது خاتم زمانی ( காலத்தால் இறுதியானவர்) என்று மட்டும் பொருள்

கொள்வதைதான் சாமானிய ஜனங்களின் கருத்து என்று கூறியுள்ளார்.ஆனால் காதமுன் நபிய்யீன் என்பதில் خاتم مکانی خاتم مرتبی என்ற இருவிதமான அர்த்தமும் உள்ளது.மேலும் எந்த ஒரு ஸஹாபியும்,முபஸ்ஸிரும் அதைக்கொண்டு خاتم زمانی என்று மட்டும் பொருள் கொண்டதாக நிரூபணமாகவில்லை. எனவே காதமுன் நபிய்யீன் என்பதற்கு குறிப்பான பொருளை தருவதைதான் சாமானிய ஜனங்களின் கருத்து என காஸிம் நானூதவி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள் என்பதை தெளிவாக விளங்கமுடிகிறது.இன்ஷா அல்லாஹ் தொடரும

**ஆறாவது குற்றச்சாட்டு**: காதமுன் நபிய்யீனில் زمانی என்ற பொருளெல்லாம் அறவே இல்லை என்பதாக வாதம் வைக்கின்றனர் பரலேவி அறிஞர் கூறுகிறார்:’காதமுன் நபிய்யீன்’என்பதானது குர்ஆனின் வசனத்தின் மூலம் நபி ஸல் அவர்கள் இறுதி நபி என்பதுதான். இதுதான் குர்ஆனின் உறுதிமிக்க தெளிவான ஆதாரமாகும்.இறுதிநபி என்பதைதான் நபி (ஸல்) அவர்களிடமிருந்து ஸஹாபாக்கள் அறிவித்தார்கள். அவர்களின் மூலம்

ஒட்டுமொத்த உம்மத்தின் ஒன்றுப்பட்ட கொள்கையும் இதுதான் என நிரூபிக்கப்பட்டுள்ளது. இதனைதான் முஹத்திஸீன்களும், முபஸ்ஸிரீன்களும் குர்ஆன்,ஹதீஸ் ஒளியில் கூறுகிறார்கள்.இதற்கு மாற்றமாக காதமுன் நபிய்யீனுக்கு வேறு பொருளை கொடுப்பவர் காபிரும் இஸ்லாத்தை விட்டு வெளியேறியவராவார்.(ختم نبوت اور تحذیر الناس) பரலேவிய அறிஞர் تبسم بخاری கூறுகிறார்: நுபுவ்வத் முடிந்ததை மறுப்பதும்,நபியின் நுபுவ்வத் பூரணத்துவம் பெற்றது என்பதும் காதியானிகளுக்கு பலனளிப்பதாகும்.( ختم نبوت اور تحذیر الناس) இதில் அவர்களின் வாதங்கள்: 1)காதமுன் நபிய்யீன் என்பதற்கு இறுதி நபி என்பதை தவிர வேறு பொருளில்லை.வேறு பொருள் கொள்வதானது இறைநிராகரிப்பாகும். 2)இதனை இறைநிராகரிப்பு என சொல்லாமல் இருப்பதும் இறைநிராகரிப்பாகும். 3) “காதம்” என்பதற்கு நபித்துவம் பரிபூரணம் பெற்றுவிட்டது என்பது காதியானிகளுக்கு பலனளிக்கும். இதனை முன்வைத்து பரலேவிகள் கூறுவதானது: காதமுன் நபிய்யீன் என்பதற்கு خاتم زمانی என்பதானது தவறும்,

இறைநிராகரிப்புமாகும். தக்க பதிலடி: பரலேவி அறிஞர் فاضل அவரின் தந்தையின் நூலானா الكلام الاوضح யை புகழ்ந்தும்,வர்ணித்தும் கூறியுள்ளார்.அந்த நூலில் மார்க்க ஞானங்கள் பொதிந்துள்ளதாக கூறியுள்ளார் அதில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது: காதம் என்பதின் பொருளானாது அலங்காரமாகும்.நபி (ஸல்) அவர்கள் அனைத்து நபிமார்களின் அலங்காரமாக உள்ளார்கள். பீர் ஜமாஅத் அலி ஷாஹின் மகனார் முஹம்மது ஹீஸைன் ஜமாஅதி கூறுகிறார்: கதம் நுபுவ்வத்தின் பொருளானது நுபுவ்வத்தானது நபி ஸல் அவர்களின் மூலம்தான் பரிபூரணமானது.( افضل الرسل صلى الله) மௌலானா தாகிர் ஸாஹிப் கலீபா மஜாஜ் கவாஜா ளியாவுத்தீன் ஸய்யாலவி அவர்களின் பேரவையில் வெளியிடப்பட்ட الجامعه வில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது ختم نبوت سے مراد قطع نبوت یا انقطاع رسالت نہیں بلکہ تکمیل نبوت و ابدیت رسالت ہے கதம் நுபுவ்வத்தின் கருத்து நுபுவ்வத் முடிந்துவிட்டது அல்லது ரிஸாலத் முடிந்துவிட்டதல்ல மாறாக நுபுவ்வத் பரிபூரணம் மற்றும் நிரந்தரமான தூதுத்துவமாகும்.ஆக காதமுன் நபிய்யீன் என்பதற்கு زمانی என்ற பொருள்கொள்வதை இறைநிராகரிப்பு என விமர்சித்தவர்கள் இதற்கு

என்ன தீர்ப்பளிப்பார்கள் வெட்கித்தலைகுனிய வேண்டும்.

ஏழாவது குற்றச்சாட்டின் மறுப்பை தெளிவாக புரிவதற்கு முதலில் காஸிம் நானூதவி ரஹ் அவர்களின் உர்தூ வாசகத்தின் மொழிபெயர்ப்பையும்,அதில் ரிளாகான் பரலேவியின் திரிபையும்,அதற்கான தெளிவான விளக்கத்தையும் வரிசையாக பார்ப்போம். மௌலானா காஸிம் நானூதவி ரஹ் அவர்களின் வாசகம் بلکہ اگر بالفرض بعد زمانہ نبوی بھی کوئی نبی پیدا ہو تو خاتمیت محمدی میں کچھ فرق نہ آئے گا நபி (ஸல்) அவர்களுக்குப் பிறகு வேறொரு நபி உண்டானார்கள் அல்லது உண்டாவார்கள் என்று வைத்துக்கொண்டாலும், நபியவர்கள் காதமுன் நபிய்யீன் என்பதில் யாதொரு வித்தியாசமும் உண்டாகாது! பரலேரவியரின் குற்றச்சாட்டுகள் கற்பனையாக கூட நபி ஸல் அவர்களுக்குப் பிறகு நபி வருவார்கள் என்று சொல்வது இறைநிராகரிப்பாகும் நபிகள் நாயகம் ஸல் அவர்களுக்குப் பிறகு நபி வந்தால் காதமுன் நபிய்யீனில் வித்தியாசம் ஏற்படாது என்பது இறைநிராகரிப்பாகும். ஏனெனில் நபி ஸல் அவர்கள்தான் இறுதி நபியாக இருக்கும் போது மற்றொரு நபி வருவதானது காதமுன்

நபிய்யீனில் வித்தியாசத்தை உண்டாக்கும் என்பதுதான் சரியாக இருக்க முடியும். தக்க பதிலடி கற்பனையாக நபிக்கு பிறகு நபி வருவார்கள் என்று சொல்வதானது சரியான கொள்கை என்பதை இந்த மறுப்பின் ஆரம்பத்தில் பதிலளித்துள்ளோம்.அடுத்த விஷயம் கற்பனையாக நபிக்கு பிறகு வேறொரு நபி வருவார் என்று வைத்துக்கொண்டாலும் காதமுன் நபிய்யீனில் யாதொரு வித்தியாசம் ஏற்படாது என்று காஸிம் நானூதவி ரஹ் அவர்கள் சொன்னதானது خاتم زماني யை குறித்தல்ல மாறாக خاتم مرتبي யை குறித்தாகும்.இனி இதனைப் பற்றிய விரிவான விளக்கத்தைப் பார்ப்போம்.

ஒரு அறையில் பத்து நபர்கள் ஒருவர் பின்பு ஒருவராக வருவாரானால் இதில் பத்தாவதாக வந்து நபர் சிறந்த நபர் என்பதாக யாராவது கூறுவாரா? அலி ரளி அவர்கள் குலஃபாயே ராஷிதீன்களில் இறுதியானவர் என்றாலும் முதல் கலீபாவான அபூபக்கர் (ரளி) அவர்கள் அலி ரளி விட சிறந்தவர்கள் எனவே இறுதியில் வருவதனால் மட்டும் ஒருவர் சிறந்தவராக ஆகமுடியாது.இங்கு நமக்கு ஒரு கேள்வி

எழலாம் அதாவது குர்ஆனில் அல்லாஹ் நபி ஸல் அவர்களை காதமுன் நபிய்யீன் என்பதாக சொல்கிறான்.இறுதியில் வருவதனால் மட்டும் ஒருவர் சிறந்தவர் என்பதாக கூறமுடியாது எனும் போது அல்லாஹ் ஆயத்தில் நபி (ஸல்) அவர்களை காதம் என்பதாக சிறப்பித்து கூறுவதன் காரணம் என்ன? வினாவிற்கான விடை நமது நபி ஸல் அவர்களின் அந்தஸ்து மிகவும் உயர்ந்தது.மேலும் பதவியும் மதிப்புமிக்கது.இதன் காரணமாக மட்டும் நபி (ஸல்) அவர்கள் இறுதியாக அனுப்பியிருக்க முடியாது.வேறு ஏதேனும் காரணமும்,நோக்கமும் இருக்கு வேண்டும்.நபி (ஸல்) அவர்களின் அந்தஸ்து உயர்வாக இருக்கும் போது இறுதியாக அனுப்பும் தேவை ஏன்? இதற்கு விடை நபி (ஸல்) அவர்கள் முதலாவதாக அனுப்பியிருந்தால் நபி (ஸல்) அவர்களுக்கு பிறகு வரும் நபியானவர் நபி (ஸல்) அவர்களை விட அந்தஸ்து குறைந்ததின் காரணமாக அவர் கொண்டு வரும் மார்க்க சட்டங்களை விட நபி (ஸல்) அவர்களின் மார்க்க சட்டமானது உயர்வு பெற்றிருக்கும். நபி கொண்டு வந்தது குர்ஆன் மற்ற நபிமார்கள் கொண்டு வந்தது ஏடுகள் அல்லது

வேதங்களாகும்.நபி ஸல் அவர்கள் முதலாவதாக வந்திருந்தால் அவர்களின் சட்டதிட்டங்களை பின்னால் வரும் வேறு நபியின் சட்டமானது மாற்றிவிடும்.இதன் மூலம் இப்படி ஒரு நிலை உண்டாகிவிடும்.அதாவது அந்தஸ்து குறைவாக உள்ள சட்டமானது அந்தஸ்து கூடுதலாக உள்ள சட்டத்தை மாற்றும் நிலை ஏற்பட்டுவிடும்.இது அல்லாஹ்வின் ஞானத்திற்கு எதிரானது ஏனெனில் அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறார்கள் ما ننسخ من آية او ننسها نات بخير منها அல்லாஹ் ஒரு சட்டத்தை மாற்றுவதென்பது அதனைவிட சிறந்ததாக இருக்கு வேண்டும் எனவே நபி (ஸல்) அவர்களை ஆரம்பத்திலோ,நடுவிலோ அனுப்பியிருந்தால் அல்லாஹ்வின் அறிவு ஞானத்திற்கு எதிரானது.

நபி ஸல் அவர்களுக்கு சரிசமமாகவோ,அவர்களைசிறந்தவரோ எவருமில்லை. இதனால்தான் நபி (ஸல்) அவர்கள் இறுதியில் வந்தது அவரின் பரிபூரணத்தகுதியாகும். இப்பொழுது நமக்கு ஒரு கேள்வி எழலாம்.நபி ஸல் அவர்களுக்கு சரிசமமாகவோ,அவர்களை விட சிறந்தவரோ

ஏன் வரமுடியாது பதில் தன்மைகள் என்பதானது இருவகையாக உள்ளன.ஒன்று ذاتى (அசலானது) இது ஆரம்பத்திலிருந்தே இருக்கும்.எவரின் மூலமும் கிடைத்ததல்ல.இரண்டாவது عرضى( தற்காலிகமானது) இது ஆரம்பத்திலிருந்து இருக்காது.மற்றதின் மூலம் கிடைத்தது.உதாரணமாக சுவரில் வெளிச்சம்படுகிறது.இந்த வெளிச்சமானது சூரிய ஒளியினாலாகும்.சுவரில் இருக்கும் ஒளியானது அசலன்று.ஏனெனில் இரவில் சுவரில் வெளிச்சம் இருக்காது.ஆனால் சூரியன் ஒளியானது அசலானதாகும்.அது எப்பொழுதும் அதனை விட்டும் பிரியாது.இதைப் போன்று சந்திரனின் வெளிச்சமும் அதனுடையதன்று.அதற்கு வெளிச்சமானது சூரியனின் மூலமே கிடைக்கிறது. வெளிச்சமானது இரவில் எந்தப் பொருளில் படுகிறதோ அதனின் ஒளியானது சந்திரனின் காரணத்தினாலாகும். சந்திரனுக்கு வெளிச்சம் கிடைப்பதானது சூரியனின் காரணமாகும்.எனவே சூரியன்தான் ஒளிகளுக்கு எல்லையும்,இறுதியுமாகும்.இதே போன்றுதான் நபி ஸல் அவர்களின் உயிரானது

படைக்கப்பட்டவுடன் நபி ஸல் அவர்களுக்கு நுபுவ்வத் கிடைத்துவிட்டது.ஆனால் மற்ற நபிமார்களுக்கு நுபுவ்வத்தானது நபியின் பொருட்டால் கிடைத்தது.நபியின் நுபுவ்வத்தானது அசலானது என்பதற்கு ஆதாரம் كنت نبيا و آدم بين الروح و الجسد ஆதம் அலை அவர்கள் உயிர் மற்றும் உடலுக்கு மத்தியில் இருக்கும் போதே நான் நபியாக இருந்தேன் என நபி ஸல் அவர்கள் கூறினார்கள்.நபி ஸல் அவர்களுக்கு நுபுவ்வத்தானது எவரின் பொருட்டாலும் கிடைக்கவில்லை. நபிமார்களுக்கு நுபுவ்வத்தானது நபியின் பொருட்டால் கிடைத்தது.நபிமார்களின் வருகையும் நபியுடன் முடிந்துவிட்டது.நபி ஸல் அவர்களின் பரிபூரணத் தகுதி அவருக்கு மட்டுமே உரியதாகும்.இதனைதான் ختم مرتبی என்கிறோம்.இந்த அந்தஸ்தானது ஆதம் அலை பிறக்காத போதே கிடைத்துவிட்டது.எனினும் ختم مرتبی இருப்பதுடன் நபிமார்களின் வருகையும் இருந்தது.எப்பொழுது நபி ஸல் அவர்கள் வந்து எனக்கு பிறகு நபி கிடையாது என அறிவித்தார்கள்.இதன் மூலம் ختم زمانی நிரூபணமானது. காதியானிகள் கூறிக்கொண்டிருந்தார்கள் நாங்கள் ختم مرتبی யை

ஏற்கிறோம்.முஸ்லிம்கள் வெறும் ختم زمانی யை மட்டும் ஏற்கிறார்கள்.இதற்கு மௌலானா காஸிம் நானூதவி ரஹ் அவர்கள் இரண்டையும்தான் நாங்கள் ஏற்கிறோம் என பதிலளித்தார்கள். காதியானிகள் வாயடைத்துப் போனார்கள்.

இதனால்தான் காஸிம் நானூதவி (ரஹ்)அவர்கள், நபி (ஸல்) அவர்களுக்குப் பின்பு வேறொரு நபி உண்டானார்கள்,அல்லது உண்டாவார்கள் என்று வைத்துக்கொண்டாலும் காதமுன் நபிய்யீன் ( خاتم مرتبی ) வித்தியாசம் உண்டாகாது என பதிலளித்தார்கள்.ஏனெனில் நபி ( ஸல்) அவர்களுக்கு ஆரம்பத்திலேயே நுபுவ்வத் கிடைத்துவிட்டது.நபி ( ஸல்) அவர்களுக்கு பின் ஒரு வேளை எந்த நபியாவது வந்தாலும் யாதொரு வித்தியாசமுமில்லை என்பதை இதன் மூலம் விளங்கமுடிகிறது.

ரிளானின் மிகப்பெரும் மோசடி: قاسم نانوتوی صاحب تحذير الناس و هو القائل فيه لو فرض فى زمنه صلى الله عليه و سلم بل حدث بعده صلى الله عليه نبى جديد لم يخل ذالك بخاتميته و انما يتخيل العوام انه صلى الله خاتم النبيين بمعنى آخر النبيين انه لا فضل فيه اصلا عنه اهل العلم (حسام الحرمین) مکتبہ نبویی کنجاش بخش روڈ) காஸிம் நானூதவி அவர்கள் தஹ்தீருன்னாஸில் எழுதியுள்ளார்கள்.ஒரு வேளை நபியின்

காலத்திலேயே எங்காவது ஏதாவது நபி வந்தாலும் நபி ஸல் அவர்கள் காதம் என்பதில் எந்த இடையூறும் இல்லை.மாறாக நபி ஸல் அவர்களுக்குப் பிறகு நபி வந்தாலும் காதமிய்யதில் வேறுபாடு வராது.சாமானிய ஜனங்களின் சிந்தனையிலே காதம் என்பதானது நபி ஸல் அவர்கள் இறுதி நபி என்பதாகும்.முந்தியதால், பிந்தியதால் சிறப்பில்லை என்பதானது அறிவாளிகளுக்கு விளங்கும்.நாம் உலகத்தில் உள்ள பெரிய சிறிய பரலேவிகளுக்கு கூறுகிறோம் அவர்களிடத்தில் கிஞ்சிற்றும் நியாயமான உணர்வும்,ஈமானும் இருந்தால் தஹ்தீரின்னாஸில் இருப்பதாக கூறும் இந்த வாக்கியங்களை இதே வரிசையில் காண்பிக்க தயாரா? மௌலவி ரிளாகான் பரலேவி அஹ்லுஸ்ஸுன்னா உலமாக்களை காபிராக்கும் ஆர்வத்தினால் மரணத்தைப் பற்றிய பயமும்,மறுமையின் அச்சமும் சிறிதும் இல்லாமல் கேள்வி கணக்கைப் பற்றி சிந்தனையுமின்றி தஹ்தீரின்னாஸில் உள்ள 21,82,3 போன்ற பக்கங்களில் இருந்த வாசகத்தை எடுத்து ஒரே வாசகமைப்பை போல் உருவாக்கிவிட்டார். பரலேவிகளின் வாதம் இதில் எந்த ஒரு மோசடியுமில்லை.ஏனெனில்

இம்மூன்று வாசகமும் தனித்தனியான இறைநிராகரிப்பான வாசகமாகும்.தக்க பதிலடி பரலேவிகள் கொஞ்சம் கூட மறுமையின் அச்சமுற்றவர்கள் என்பதற்கு இந்த வாதமே போதுமானது.ரிளாகானின் மோசடியை மறைப்பதற்கு வெட்கமின்றி செய்யும் செயலாகும். உங்களின் வாதத்தின் படி இம்மூன்று வாசகமும் தனித்தனியான குஃப்ரு என்றால் முன்,பின் போக்குவதன் தேவை என்ன?

முதல் வாக்கியத்தை இறுதியிலும், இறுதி வாக்கியத்தை மத்தியிலும், நடுவில் உள்ள வாக்கியத்தை ஆரம்பத்திலும், கொண்டு வருவதன் தேவை ஏன்? பிறகு மூன்று வாக்கியங்களையும் ஒன்று போல் உருவாக்கிவிட்டார்.அதற்கு மத்தியிலும் மூன்றையும் பிரித்து காட்டும் எந்த ஒரு அடையாளமில்லை.ஆக ரிளாகான் பரலேவி திட்டமிட்டு மோசடி செய்துள்ளார் என்பது அப்பட்டமாக வெளிப்படுகிறது.எட்டாவது குற்றச்சாட்டு முஃப்தி ஷபீஃ (ரஹ்) அவர்கள் هدية المهديين ல் கூறுகிறார் இந்த ஆயத்தின் மூலம் நபி ஸல் அவர்கள் இறுதிநபி என்பதானது நிரூபணமாகிறது.இது அல்லாமல் வேறு

பொருளில்லை. இதே கருத்தையே இத்ரீஸ் காந்தலவி ரஹ் அவர்கள் مسك الختام என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்கள்.தக்க பதிலடி மு:ப்தி ஷபீ: மற்றும் மௌலானா இத்ரீஸ் காந்தலவி அல்லது எங்களின் தேவ்பந்த் பெரியார்கள் கூறுவதன் காரணமானது இவைகள் காதியானிகளுக்கு எதிராக எழுதப்பட்டது.காதியானிகள் கதம் நுபுவ்வத்தின் வெளிப்படையான கருத்தான ختم زمانى யை முற்றிலும் மறுக்கிறார்கள்.அவர்களின் இறைமறுப்பு கொள்கைக்கு மறுப்பளிப்பதற்கு கூறப்பட்டுள்ளது.மௌலவி அஹ்மது ரிளாகான் அவரின் நூலான جزاء الله وعده என்ற நூலில் ஓரக்குறிப்பில் குறிப்பிட்டுள்ளார் அல்லாமா حقى மற்றும் ميرك நபி ஸல் அவர்களின் சிறப்புகளைப் பற்றி கூறும் போது நபி ஸல் அவர்களின் உம்மத்தின் தவ்பானது استغفار கொண்டு மட்டுமே ஏற்கப்படும் என்கின்றனர்.இதற்கு முல்லா அலி காரி ரஹ் அவர்கள் جمع الوسائل மறுப்பளிக்கறார்கள். இவர்கள் இருவரின் கருத்தை எந்த அறிஞரும் கூறவில்லை.மேலும் தவ்பாவின் நிபந்தனைகளில் இஸ்தி:பார் மட்டும் போதுமானதல்ல மாறாக கடந்த பாவத்தின் மீது

வருந்துவது,பாவத்தை விட்டுவிடுவது,வரும் காலங்களில் பாவங்களை விட்டு தவிர்ந்திருப்பது அனைத்தும் இணைந்துள்ளதுதான் தவ்பாகும். முல்லா அலி காரி (ரஹ்) அவர்களின் மறுப்பிற்கு பதிலளித்தவாறு இறுதியாக கூறுகிறார் அல்லாமா حقي மற்றும் ميرك நோக்கமானது தவ்பாவிற்கு இஸ்தி◌ஃபார் மட்டும் போதுமானது என்பது கருத்தல்ல.கைசேதப்படுவது பாவத்தை விட்டுவிடுவது இனி செய்யாமல் இருப்பதாக உறுதி கொள்வது தவ்பாவின் நிபந்தனைகளில் உள்ளதை இருவரும் மறுக்கவில்லை.மாறாக அவர்களின் நோக்கமானது நபி (ஸல்) அவர்களின் உம்மத்திற்கு தவ்பாவானது ஏற்கப்படுவதற்கு இஸ்தி◌ஃபார் போதுமானது மற்ற உம்மத்தை கவனித்து கூறப்பட்டதாகும்.ஏனெனில் மற்ற உம்மத்தில் பாவத்திற்கு பரிகாரம் பாவம் செய்தவரை கொன்று விடுவது கடினமாக வருந்திக்கொள்வது போன்ற விஷயங்கள் இருந்தன.நம் உம்மத்தின் பாவத்திற்கு இதுபோன்ற பரிகாரம் அவசியமில்லை என்பதை விளக்கதான் தவ்பா மட்டும் போதுமானது என்பதாக கூறினார்களே தவிர

மற்றவைகளை மறுக்கவில்லை. ஆக இதைப் போன்றுதான் தேவ்பந்து பெரியார்கள் கதம் நுபுவ்வத்திற்கு இறுதி நபி என்பதாக கூறியதானது காதியானிகளை கவனித்தாகும்.ختم مرتبی யை மறுக்கவில்லை.

<u>ஒன்பதாவது குற்றச்சாட்டு</u> பரலேவி அறிஞர் கூறுகிறார:ْ بلکہ بالفرض آپ کے زمانہ میں بھی کہیں اور کوئی نبی ہو جب بھی آپ کا ختم ہونا بدستور باقی رہتاہے ( حسام الحرمین مع تمہید ایمان مکتبہ المدینہ) நபி ஸல் அவர்களின் காலத்தில் எங்காவது மற்றும் ஏதேனும் நபி பிறந்தாலும் நபி ஸல் அவர்கள் காதம் என்பதானது பாக்கியாக இருக்கும்.காஸிம் நானூதவியின் இந்த வாசகமானது கு.ஃப்ராகும்.

தக்க பதிலடி: இதனை கு.ஃப்ர் என வாதித்தால் முதலில் இறைநிராகரிப்பிற்கு தகுதியானவர் ரிளாகான் பரலேவிதான்.ரிளாகான் பரலேவி கூறுவதைப் பாருங்கள்! நான்கு நபிமார்கள் உயிரோடு இருக்கிறார்கள்.ஒரு நிமிடமும் மரணம் வரவில்லை.அதில் இருவர் வானத்தில் இருக்கிறார்கள்.ஈஸா (அலை) இத்ரீஸ் (அலை) அவர்களாவார்கள்.இருவர் பூமியில் உயிரோடு இருக்கிறார்கள்.ஹிள்ர் ( அலை) இல்யாஸ் (அலை) அவர்களாவார்கள்(مشتاق ملفوظات) முஹம்மது அஷ்ரப் ஸய்யாலவி கூறுகிறார்கள்: நான்கு நபிமார்கள்

வெளிப்படையான வாழ்வுடன் உயிரோடு உள்ளார்கள்.ஹள்ரத் ஈஸா ( அலை) ஹள்ரத் இத்ரீஸ் ( அலை) ஹள்ரத் ஹிள்ர் ( அலை) ஹள்ரத் இல்யாஸ் ( அலை) ஆக காஸிம் நானூதவி ரஹ் அவர்கள் கற்பனையாக நபி ஒரு வேளை வந்தால் என்று சொன்னது இறைநிராகரிப்பு என்றால் ரிளாகான் பரலேவி சொன்னதை என்னவென்று சொல்வது?

பத்தாவது குற்றச்சாட்டு: பரலேவி அறிஞர் ஸய்யாலவி கூறுகிறார்: குர்ஆனிற்கு சுயவிளக்கம் கூறுவதானது குப்ராகும்.எனவே காஸிம் நானூதவி தஹ்தீருன்னாஸில் கூறியதும் சுயவிளக்கமாகும். தக்க பதிலடி:ரிளாகான் பரலேவி கூறுகிறார்: தவ்பாவின் பொருளானாது மாறுசெய்வதிலிருந்து தவிர்ந்திருப்பதாகும். எவருக்கு மாறுபுரிந்துமோ அவருக்கு வழிப்படுவதின் மீது புதியதாக உறுதிகொள்வதன் மூலம் பொருந்திக்கொள்ள முயற்சி செய்வதாகும்.இந்த விஷயமானது குர்ஆனின் மூலம் நிரூபணமாகியுள்ளது. அல்லாஹ்விற்கு மாறுசெய்பவர் நபிக்கும் மாறுசெய்பவராவார்.இந்த விஷயமானது உபதேச இரத்தினமாகும். எதார்த்தமாக

நாவிலிருந்து வெளிப்பட்டது.இது பேணப்படுவதற்கு தகுதியானது.இந்த கருத்தானது இதிலே தவிர வேறு எங்கும் கிடைக்காது.(جزاء الله عدوه باباه ختم نبوت) ரிளாகான் பரலேவி சொல்வதின் சுருக்கமாவது: தவ்பாவிற்கு சொன்ன கருத்தானது என்னுடைய இந்த நூலிலிருந்தே தவிர வேறு எங்கும் கிடைக்காது.இதனை ரிளாகானின் சுயகருத்து என்பதை விளங்க முடிகிறது குர்ஆனிற்கு சுய கருத்தை கூறியவர் காபிர் என்றால் உங்களின் வாதத்தின்படி ரிளாகான் பரலேவி அதற்கு தகுதியானவரே! முஃப்தி அஹ்மது யார் குஜராத்தி لن تنالوا البر حتى تنفقوا مما تحبون என்ற வசனத்தின் விளக்கவுரையில் கூறுகிறார்:ஷபே பராஅத்திற்கு இனிப்பு செய்வதும், மரணித்தவருக்கு பாத்திஹா ஓதும்போது மரணித்தவர் விரும்பியதை உணவாக வைப்பானது இந்த வசனத்திலிருந்தே எடுக்கப்பட்டது.(نور العرفان) இந்த விளக்கத்தை அங்கீகரிக்கப்பட்ட விரிவுரையாளரின் நூலிலிருந்து காட்டமுடியுமா?

பதினொன்றாவது குற்றச்சாட்டு:ஒரு நபர் தொழுகையானது பர்ளு என்பதை ஏற்பதுடன் அதனை மறுப்பவரையும் காபிர்

என்கிறார்.ஆனால் குர்ஆனில் உள்ள اقيموا الصلوة என்பதற்கான பொருளை மாற்றி அதற்கு உடற்பயிற்சி செய்தல் என்ற அர்த்தம் என வாதிட்டால் அவரை காபிர் என சொல்வோம்.அதைப் போல காஸிம் நானூதவி அவர்களும் காபிராவார்கள். தக்க பதிலடி: இந்த ஒப்பீடானது தவறும்,அறியாமையுமாகும்.காஸிம் நானூதவி ரஹ் அவர்கள் காதம் நபிய்யீன் என்பதற்கு குர்ஆன்,ஹதீஸ், இஜ்மாவிற்கு மாற்றமான எந்த கருத்தையும் கொடுக்கவில்லை. இம்மூன்றின் மூலம் நிரூபணமானதைதான் ஏற்கிறார்கள்.ஆனால் அதே சமயத்தில் خاتم زماني உடன் خاتم مرتبي யை ஏற்கிறார்கள்.இரண்டிற்கும் மத்தியிலும் முரண்பாடும் இல்லை.மாறாக خاتم زماني யானது خاتم مرتبي அவசியமாக்குகிறது. உதாரணமாக குர்ஆனில் மூஸா ( அலை) சமூகத்தாரின் சம்பவம் கூறப்பட்டுள்ளது. பனூஇஸ்ரவேலர்களில் ஒருவர் கொல்லப்பட்டார். கொலைகாரனை கண்டறிய காளைமாடு அறுக்கப்பட்டது.இதனின் விளக்கத்தில் ஞானவான்கள் கூறுகிறார்கள்.காளைமாடு என்பதானது

ஆத்மாவாகும். பரலேவி அறிஞர் அஹ்மது யார் குஜராத்தி கூறுகிறார்: ஒவ்வொரு சமூகமும் காளைக்கன்றை வணங்குகிறார்கள். அல்லாஹ்வின் சிந்தனையை விட்டும் எந்த விஷயமானது நம்மில் பொடுபோக்கை ஏற்படுத்துமோ அது காளைக்கன்றாகும்.( تفسير نعيمي) அசலான பொருளை மாற்றுதல் குப்ரு என்றால் ஞானவான்கள்,அஹ்மது யார் குஜராத்தியை கா..பிர் என பரலேவிகள் தீர்ப்பளிக்க தயாரா? பீர் கரம் அலி ஷாஹ் பரலேவிய அறிஞர் அவர்கள் காஸிம் நானூதவி ரஹ் அவர்களின் கருத்தை ஏற்றுக்கொண்டுள்ளார்கள்.அதற்கான ஆதாரம் இத்துடன் இணைக்கப்படுகிறது.